# 3
# இருட்டின் நிறங்கள்

எங்க ஆண்ட்டி இருக்காங்களே அவங்களே ஒருமாறி ஸார்! ஓங்களுக்குத் தெரியாது. தஞ்சாவூர்லியே இது மாதிரி எத்தனை பேர் இருப்பாங்கன்றீங்க? எங்க ஆண்டி ஒண்டிதான்! ஆமா! என்ன அப்படிப் பாக்குறீங்க? சின்ன பயலாட்டம் இருக்கனேன்னுட்டா? என்ன ஸார் செய்யறது? காலேஜ்ல பி.ஏ. தேட் இயர் படிச்சிட்டிருக்கறேன்னு சொன்னாக்கூட யாரும் நம்பமாட்டேங்கிறாங்க ஸார். போன வர்ஷம் 'காலேஜ் பேபி' ப்ரைஸ் யாருக்குன்றீங்க? எனக்குத்தான்! காலேஜிலேயே சின்னவனா அழகா எல்லா சப்ஜெக்ட்லியும் மொதல்ல இருக்கிற ஸ்டூடண்டுக்கு 'காலேஜ் பேபி' ப்ரைஸ் கெடைக்கும் ஸார்! காலேஜ் டேயன்னைக்கி கலெக்டரொட வைஃப், ஒவ்ஒர்த்தராக கூப்ட்டு ஸ்டேஜ்ல ப்ரைஸ் எல்லாத்தையும் ப்ரின்ஸ்ப்ல் முன்னால குடுத்தப்போ... ஏம்பேரையும் கூப்டாங்க.

பசங்க நடுவுல அந்தம்மா ஏங் கன்னத்தெத் தட்டி ஹவ்ஸ்வீட் யூ ஆர்ன்னு சொன்னதும் எனக்கு நாக்கெப் பிடுங்கிகிட்டு சாகலாம்போல இருந்துச்சு ஸார்! ஸ்டேஜெ விட்டு கீழ இறங்கின ஒடனே ராஸ்கல் சிவா சொல்றான், ''அவ ஒன்னெ அவளொட கார்லியே தூக்கிப்போட்டுண்டு போய்டப் போறாளோன்னு பயந்துட்டேண்டா''ன்னு. இந்தக் காலேஜ்ல சேந்ததே தப்பு ஸார்! இதேதான் ஸார் லெக்சரர்ஸ்ஸூம் பண்றாங்க! ஒவ்வொரு அவர்லியும் ஒவ்வொரு லெக்சரர்க்கும் பதில் சொல்ல வேண்டீது படிக்க வேண்டியது படிக்க வேண்டீய லெஸன்ஸே கொச்சன்ஸ்க்கு ஆன்ஸர் சொல்ல வேண்டீது ப்ரிப்பேர் பண்ண வேண்டீது எல்லாம் நான்தான்! ப்ளாக் போர்டு க்ளீனிங் கூட நான்தான்! ஸர்வீஸ் தானே இதெல்லாம்ன்னு பேசாம இருந்தாக்கூட பசங்க உடமாட்டேங்கிறாங்க ஸார். எவனெப் பார்த்தாலும் அதென்ன ஸார் ஒரு வெஷமப் பார்வை? அண்ணைக்கிந்த சிவா பயல் கேக்கறான் ஸார் இங்க்லீஸ் ப்ரொபஸர் எச் ஆர் வி உன்னெ ரூம்க்குள்ள கூட்டிட்டுப் போயி என்னடா பண்ணினார்ன்னு! ஸார் எனக்கு குப்ன்னு அழுகை வந்துடுச்சி ஸார்! அழுதுட்டா இன்னும் பேசீட்டே போவான் ஸார் ப்ளகாட்! அதுனாலியே அடக்கிபிட்டேன். ஒடனே நெஞ்சில என்னோட வெரலாலெ ஒரு சிலுவை வரைஞ்சுகிட்டேன் ஸார். அப்பொ குபீர்ன்னு சிரிக்கிறான் சார், ந்த சிவா ரோக்! அவனுக்கென்ன ஸார் நான் செய்ற எல்லாமே சிரிப்பாத்தானே இருக்கு. சிலுவை போட்டுக்கறது க்ளாஸ் பிகின் பண்றப்போ நானே எனக்குள்ற கண்ணெ மூடிகிட்டு 'ப்ரே' பண்றது. க்ளாஸ் டெக்ஸ்ட் புக்ஸ், நோட்ஸ்ஸோடே நான் கொண்டுவர்ர 'நியுடெஸ்ட்மென்ட்ஸ் அண்ட் ப்ரேயர்' புக் எல்லாமே ஏன் நான் கிறிஸ்தவங்கறதே இவனுக்கு கேலியா இருக்கு. அதுல சின்னப்பயலா வேற

இருக்கேனா... ரொம்ப சுளுவா போச்சு மெரட்றத்துக்கு. பெரிய்ய இன்ட்டலக்ட் மாறி பேசுவான் ஸார்... ஆனா க்ளாஸ் டெஸ்ட்ல எல்லாம் சுன்னம்தான்! கீழ் ஒதட்டெக் கடிச்சிட்டே ஒரு மாறியாப் பாப்பான் ஸார் பயம்மா இருக்கும்!... பயம்னா இவங்கிட்ட மட்டுமா? எல்லார்ட்டையுமே பயமாத்தான் ஸார் இருக்கு. எதுனாச்சும் பண்ணிடுவாங்களோன்னு காலைலருந்து சாயங்காலம் வரைக்கும் ந்தப்பயல்கள் கிட்டெ அல்லாம் வேண்டீருக்கு. சிவா இருக்கானே அவன் அசிங்கம் அசிங்கமாக 'கேள்ஸ்' விஷயமல்லாம் பேசுவான் ஸார். நான் போறேண்டான்னு நகருவேன் உடமாட்டான் ஸார். பானுவெப்பத்தி சுசியெப்பத்தி, ஹிஸ்ட்ரிக்கி வர்றாங்களே மேடம் ஜானகி அவங்களெப்பத்தி போட்நெக்கும் யூநெக்கும் நெக்கே இல்லாமலும் ஜாக்கட் போட்டுட்டு வாறாளே அந்த சேட்டுப் பொன்னு குன்ஹி நிதம் ட்ரெய்ன்ல வர்றாளே பாரதி எல்லாரையும் பத்தி பச்சை பச்சையா ஒடைப்பான்! உண்மையாவும் இருக்கும் ஸார்! ஆனா உண்மை எல்லாத்தையுமே பேசீட்டா நல்லாவா இருக்கும்? ஆண்ட்டி சொல்வாங்க அப்படியெல்லாம் க்ரூடா பேசக் கூடாதாம். சிவா ஒரு க்ரூட் ஃபெல்லோ ஸார்!

எதுக்கு ஸார் மென்ஸ் காலேஜ்ல விமன்ஸெச் சேக்கறாங்க? கோஎஜுக்கேஷன் எனக்குப் பிடிக்கவேல்ல ஸார்! நான் பியூஸில் சேந்தப்பதான் ஸார் பானு படிச்சா! ஆம்பள மாறி நிமிந்து நடப்பா ஸார். அவ காலேஜ் வராண்டால நடந்து வரும் போது பசங்கள்ளாம் கூட அடங்கி நிற்பாங்க, சிவா பய மட்டும் பழக்கத்தெ உடாமெ விஸில்லியே ஒரு தமிழ் சினிமா டூயட்டெ அடிச்சு விடுவான் ஸார். நிமிந்து அவனையும் என்னையும் ஒரு தடவை பாத்துட்டு க்ளாஸ்க்குள்ள போய்ருவா ஸார். அப்போ எனக்கு உயிரே போய்டும் ஸார். அப்பப்பா! சிவப்பா குண்டா பொம்மெ மாறி அழகா இருப்பா ஸார் பானு. கை கால் எல்லாமே மொழு மொழுன்னு விரலாலே தடவி தடவிப் பண்ணினமாறி இருக்கும் ஸார். நெறைய்ய தலைமுடி சுருள் சுருளா இருக்கும். பசங்களுமே சொல்லி வெச்ச மாறி அவளெ திட்டிக்குவான்க ஸார்! அவளெ அஞ்ச பாத்தேன், அந்தப் பயலோட பாத்தேன், அந்த ப்ரொபஸரோட அங்க பாத்தேம்பானுக ஸார் ஒவ்வொரு பயலும், உண்மைல அப்டி இருக்காது ஸார்.

ஆனா பானுவுக்கு கூட என்னெப் பாத்தா எளப்பந்தான் இருக்கும் போல இருக்கு. இப்போ பானுவும் என்னோட க்ளாஸ்தான் ஸார்! அவகிட்ட வந்தாலே பயம்மா இருக்கு ஸார் அவளோடே டிரஸிங் மேக்கப்பே தனி ஸார். பானு ஏன் ஸார் இப்டி இருக்கா? ஒருநாள் காலைல படிக்கிறதுக்காக சீக்கிரமாகவே காலேஜ்க்கு வந்து லாப்ல போயி உட்காந்திருந்தேன். ஒண்டியமா ஒக்காந்துட்டு என்னவோமாறி இருந்துது. வராண்டால வந்து நின்னேன். திரும்பி பாக்கிறேன் பானு வந்துட்டேயிருக்கறா! ஆமா ஸார். ஸ்கைப்ளூ கலர்ல ஒரு ப்ராஸோ ஸாரி எந்த ஸ்மக்ளர்கிட்டேருந்தோ வாங்கீருக்கா சார்! என்னா பொருத்தமா ஒரு ஒய்ட் ஸில்க் ப்ளவ்ஸ். வெள்ளைக் கலர் கண்ணாடி வளையல் ஒரு அடுக்கு ஒரு கைநெறய்ய வெள்ளை ஸ்ட்ராப் போட்ட ஓமேகா லேடீஸ் வாட்சு

மறுகையில் ஸ்லிப்பர் ஹை ஹீல்! ஸாரி விளிம்பெல்லாம் புது மாடல் லேஸ் கட்டிங் வெச்சி தச்சு ப்ரமாதமா இருக்கா சார்! ஆனா வந்த ஒடனே ''ஹாய் ஜோஸ்,''ன்னு கூப்டுவாளோன்னு நெனைக்கிறேன் சார் ஆனா- ''ஏய் காலேஜ் பேபி! ஏன் இங்க நின்னின்டு இருக்கே?''ங்கறா சார்! என்னா திமிர் சார் இவளுக்கு. இவ ஜட்ஜ் வீட்டுப் பொண்ணாயிருந்தா அது இவளோட! எனக்கென்ன அதப்பத்தி? அசிங்கமா தப்புத்தப்பா இவ பேசற இங்கிலீஷும் ஸ்டைலும் யாருக்கு வேணும்? சரியான மப் சார் இவ க்ளாஸ்ல! ஒரு சப்ஜெக்ட்லியாவுது ஒரு எக்ஸாம்லயாவது படிச்சு பாஸ் பண்ணீருக்காளா சார் இவ!? இவ என்னெப் பாத்து கேலி பண்றா சார்! புக்வம்; ஜீரா போளினுட்டு. ஆமா சார் நான் புக்வம்தான். எனக்கு வேற ஒண்ணும் வாண்டாம் சார். கிளாஸ்ல ஃப்ஸ்ட்! அதான் சார் என்னோட எய்ம்! இது வரைக்கும் நாந்தான் ஃபஸ்ட். அதுனாலேதான் சார் பசங்களுக்கு கூட ஏங்கிட்ட கொஞ்சம் பயம். என்னால முடிஞ்ச ஒண்ணே ஒண்ணு படிச்சு மொதலா வர்றது.

எனக்கு மதர் கெடையாது! ஃபாதர் எங்க இருக்கார்ன்னே தெரியாது! நான் ஒரு செல்ஃப் மேட் மான் ஸார். ஆனால் யாருமே என்னை ஒரு மான்னே ஒத்துக்க மாட்டேங்கிறாங்க. அண்ணைக்கி அந்த பஸ் கண்டக்கடர் ''ஏய் தம்பி எளுந்திரிச்சி முன்ஸீட்ல அந்தம்மா இருக்காங்க பாரு, அவங்க பக்கத்ல உக்காரு. சின்னப் பையந்தானே''ங்கறான். நான் என்ன அப்ப சின்ன பயலா? ரெண்டு நிமிஷத்ல கண்டக்டர் ஏம்பக்கத்லவந்து ஏங் கையெப் புடிச்சு பரபரன்னு இழுத்து அந்தம்மா கிட்ட உக்காத்தீட்டுப் போய்ட்டான் சார்! ஒரே நிமிஷம் அந்தம்மா கவலையில்லாம நகந்து ஒட்டின மாதிரி சகஜமா இருக்கா!

எங்க க்ளாஸ்லிலே படிக்கிறாளே குன்ஹி வடக்கத்திப் பொண்ணு - அவ ஒருநாள் சினிமா தியேட்டர்ல என்னெப் பாத்துட்டா! நானும் மரியாதைக்கி ஹலோன்னு ஒண்ணு போட்டு வெச்சேன், கூட்டமே இல்ல. ரெண்டுமூணு அவளோட சின்ன பிரதர்களோட வந்திருந்தா! அவளுடைய அண்ணா கோடியிலே உக்காந்திருந்தார். கூப்புடறா திடீர்ன்னு! போறேன்! அண்ணங்கிட்ட அறிமுகப்படுத்தி விடறா காலேஜ் பேபின்னு! அவ பக்கத்திலியே உக்கார வேண்டி ஆயிட்டுது. லைட்டெ அணைச்சிட்டான் - இதை கவனிக்கவேயில்ல. பிக்சர் தொடங்கீட்டுது. ஏதோ ஒரு அவார்ட் வாங்கின இங்கிலீஷ் படம்! சளசளன்னு இவ பக்கத்லருந்து இங்கிலீஷ்ல பேசுறா! படம் விறுவிறுன்னு போகுது. இவ என்னென்னமோ பேசிகிட்டேயிருக்கறா! இவ சாதாரணமா ஏங்கிட்ட இப்டி பேசுறவ இல்ல சார்! என்னாலியும் அவளொட பேச்செஃபாலோ பண்ண முடியல! ஏன்னா ஃபாலோ பண்ண முடியிறமாறியா பேச்சா அது இல்ல! திடீர்னு என்னென்னமோ பண்ண ஆரம்பிச்சுட்டா அவ! கதகதன்னு அவளுடம்பு சுட்றது எனக்குத் தெரியிது! ஐயோன்னு கத்தணும் போல இருக்கு. என்னோட பர்மிஷன் இல்லாம என்மேல இவ்வளவு அட்வாண்டேஜஸ் எடுத்துகிட்றா சார் - என் தொடைமேல அவ தொடையெப் போட்டு அழுத்திக்கிறா சார் - எனக்கு ஒதறிட்டு எழுந்திரிச்சி ஓடணும்ன்னு இருக்கு.

சார், நான் அழுவுறேன். கத்தி அழுணும்னு இருக்கு. ஆனா ஒரு அடிமை மாறி அழுவுறேன் - பாத்துட்டாள்ன்னா என்ன பண்றதுன்னு வெக்கத்தோட அழுவுறேன். பக்கத்ல இருக்கற வங்களுக்கெல்லாம் தெரிஞ்சிடக்கூடாதேன்னு அடக்கி அழுவுறேன். படம் முடிஞ்ச ஒடனே குன்ஹியொட அண்ணா கார்லியே என்னெ எங்க வீட்ல கொண்ணாந்து உட்டுட்டுப் போனார் சார்! பாவம் ஆண்டி கேக்கறாங்க சார் ''ஏண்டா மூஞ்சியெல்லாம் என்னமோ ஒதபட்டு வந்தாப்ல இருக்கு. எங்கியாவது அடிகிடிபட்டுச்சா என்ன?'' என்னோட பாக்கட்ல இருக்கற கர்ச்சீபெ எடுத்துப் பார்த்தால் தெரியும் எவ்வளவு லிப்ஸ்டிக்னு தெரியும்; சுபாரி கறை வேற!

ஆண்ட்டின்னாலே எனக்கு பயம்!

சார் அவுங்களைப் பாத்திருக்கீங்களா! பார்த்திருக்க மாட்டீங்க. மன்னார்குடில சர்ச்ல கூட்டிப் பெருக்கறது தண்ணி எறச்சு தோட்டத்துக்கெல்லாம் ஊத்றது. நம்ப ப்ரீஸ்ட் ஊட்டு வேலையெல்லாம் பாத்ரம் வெளக்கறது தண்ணிபுடிச்சு ரொப்புறது துணி தோச்சுப் போடறது கோயில் குட்டி வல்லேனா மணியடிக்கிறது. இதையெல்லாம் செஞ்சுகிட்டு மன்னார்குடில பாய்ஸ்போடிங் இருக்கே, அங்க சாப்ட்டு கிட்டு இப்டீ இருந்தவன் சார் நான்! கண்டவனும் வேல சொல்வான். சொன்னானேன்னு செய்யவும் செய்வேன். செய்தாலும் ஒதப்பான்க! செய்யாட்டியும், 'அவ்ளோ திமிரு வந்திடுச்'சாம்பாங்க சார்! திடீர்னு அந்த போர்டின் பய்யங்களுக் கெல்லாம் 'ஒரு குஷி மாதிரி' வந்திடும். பெரிய்ய பைய்யங்கள்ளும் ஒண்ணாச் சேந்துகிட்டு சின்னப் பயல்க கிட்ட வெளையாட்டெ ஆரமிச்சிடு வான்க! நாலு பேராச் சேந்து என்னெப் புடிச்சுகுவான்க! ஒருத்தன் என்னோட சட்டெய அவுத்து எடுத்துடுவான். ஒருத்தன் ஷர்ட்ஸ்செ கழட்டி உடுவான். இன்னோருத்தன் ரெண்டையும் உத்தரத்துக் கட்டெமேல தொங்க விட்டுடுவான், அம்மணமா ஒடம்புல ஒரு பிட் துணிகூட இல்லாம துணிக்காக, மறச்சுக்கறதுக்காக இங்கயும் அங்கயும் ஓடுவேன். ஒரே கூச்சல்தான் ஹோன்னுட்டு அம்மணமா வார்டங்கிட்ட போக முடியாது சொல்ல முடியாது. சொன்னாலும் பையன்க ஒத பிச்சு எடுத்துடுவான்க. கடைசீல கீழ அம்மணமா ஒக்காந்து மொழங்காலெக் கட்டிகிட்டு 'ஓ'ன்னு அழுவேன். அப்டீ ஒரு அரைமணி நேரம் கழிஞ்ச ஒடனே கால்சராயும் சட்டையும் என்மேல் வந்து விழும்.

எவனும் என்னெ என்ன வேணும்ன்னாலும் செய்வான் கேக்கமுடியாது. கேட்டாலும் ஒத! சொன்னாலும் ஒத! வேற வேலையா அந்த பக்கம் எவனாவது வருவான். வரும்போதே அங்க நான் உக்காந்திருந்தா ''என்னடா வார்டன் பொண்டாட்டி!''ன்னு கத்திகிட்டே ஏந் தலைல ஒரு குட்டு நறுக்குன்னு வெச்சுட்டுத்தான் அந்தப் பக்கம் போவான், ஆமா ஸார் போர்டிங்ல என்னோட 'நிக்நேம்' அதான்! வார்டன் லாஸரஸ் ஸார் இருக்காரே, எதுக் கெடுத்தாலும் இதமாறித்தான் ஜோஸ் எங்கே! ஜோஸெக் கூப்டு! ஜோஸ் இன்னும் வரலியான்னுதான் நிப்பார். ராத்ரீல அவருக்கு கால்ல எண்ணெ தேச்சுவிட்டுக்

கால் பிடிச்சுவுடணும். அவரோடயே படுத்துக்க வேண்டியிருக்கும். அவர் சொன்னபடி கேக்கல்லேன்னா நான் தேட்பாரத்தோடயே படிப்பெ நிறுத்தீட்டு போர்டிங்ல சமயலுக்கோ எண்ணெ ஆட்றதுக்கோ இல்லேன்னா தறி அடிக்கிறத்துக்கோ போயி இப்டி இருந்திருக்க வேண்டியிருந்திருக்கும் ஸார். லாஸரஸ் ஸாராலதானே ஸார் இந்த நெலைமைல இருக்கேன். அவர்தான் ஸார் மொத மொதல்ல சொன்னது! நீ ரொம்ப அழகா இருக்கடான்னு. அவர்தான் ஸார் மொதல் மொதல்ல எனக்கு பைபிள் குடுத்து ப்டிக்கச் சொன்னதும்!

டோரா ஆண்டி மன்னார்குடிக்கு வந்து லாஸரஸ் ஸார் வீட்ல தங்கீட்டு திரும்பிப் போறப்ப என்னெப் பார்த்தாங்க. ஆமா சார் அண்ணைக்கி லாஸரஸ் ஸாருக்காக பில்க்ரிம்ஸ் ப்ரோக்ரஸ் படிச்சுக்காட்டீட்டு இருந்தேன் ஸார்! டோரா ஆண்ட்டி லாஸரஸ் ஸாரொட ஒண்ணு விட்ட ஸிஸ்டர்! ஸ்ப்பின்ஸ்ட்டர் லாஸரஸ் ஸாருக்கு மாறியே அவுங்களுக்கும் கல்யாணமே பண்ணிக்கப் பிடிக்கல்ல. ஆனா டோரா ஆண்ட்டி ஏம்மாறியே நல்ல செவப்பு. மில்ட்டரியில் பதினஞ்சு வருஷம் டாக்டரா ஸர்வீஸ் முடிச்சுட்டு வந்தவங்க. நான் படிக்கிறதெப் பார்த்துட்டு 'என்னோட வந்திர்றியாடா'ன்னாங்க. லாஸரஸ் ஸாரெ பயத்தோட பார்த்தேன். 'கூட்டீட்டுப் போயேங்க்கா! யாரு வாண்டாம்ன்னாங்க' அப்டீன்னார் ஸார். நான் அப்பதான் எஸ்.எஸ்.எல்.ஸி க்ளாஸ்லே எங்க ஸ்கூல்லியே ஃபஸ்ட்டா பாஸ் பண்ணீருக்கேன். அந்த வாரக் கடைசீலயே ஆண்ட்டியோட தஞ்சாவூர் வந்து சேந்துட்டேன்.

ஸார்...ந்த இருட்டு இருக்கே அது என்னா நெறம்? அதுசரி... ஏதோ ஒரு நெறம்! ஆனா அது கறுப்புன்னு சொல்றாங்களே கறுப்பா? இருட்டுக்குப் பல நெறம் உண்டுன்னு எனக்குத் தோணுது ஸார்! ஆமா எல்லா நெறமும் சேந்துதான் கறுப்பு. அந்த மாறித் தோணுது ஒரு அசட்டுத் தனமான யோசனை!

நான் ஒரு டீன்ஏஜ் பாயாம்! ஆண்ட்டி சொல்றாங்க! இருக்கலாம் ஏன்னா எல்லார்ட்டியுமே பயப்படறேன், இல்லியா? ஆமா! ஆண்ட்டியோட கட்டில்ல ஒண்ணாத் தூங்கும் போது லாஸரஸ் ஸார் ஞாபகம் வரும். ஏன்னா அவருக்கும் நான்கூடப் படுத்தாதான் தூக்கம் வரும். பத்து வருஷம் இருட்ல அவரோடதான் படுத்துத் தூங்கியிருக்கேன். பல வர்ணமான இருட்டுகள்ளாம் ஞாபகம் வருது. ஆமா! பல நெறம். செகப்பு இருட்டு! ஒருநாள் குளுகுளுன்னு நீல இருட்டு! ஒருநாள் இருட்டு மஞ்சள். பச்சை ஊதா! குப்புறக் கெடக்கிறேன் ஒரு பெரிய சிலுவை என் முதுகுல ஊணி நிக்கிறாப்ல ஒரு நிமிஷம் மூச்சு முட்டுது ...இப்ப இருட்டு வயலட் பழுப்பா தெரியுது. திரும்பவும் ஊதாவா?... கருஞ்சிவப்பு இருட்டு பூசிகிட்டே நெரம்பு துரத்த நெறமா இருட்டு... எத்தனை இரவு பூத்த வர்ண இருட்டுகளுக்குள்ள பூந்து பூந்து...

ஸார்! எல்லாமே நான் சொல்லிக்கிற மாறிக்கி இருக்கும்கறது இல்ல. அப்படியெல்லாம் நான் சொன்னேன்னா என்னெ பைத்யம்ன்னு சுளுவா சொல்லிடுவீங்க. ஆண்ட்டிகிட்ட வந்து சேர்ந்ததும் இந்த பல பல நெறமான இருட்டு தோன்றதில்லை... ஆனா எல்லாமே கூடிகிட்டமாறி ஆய்டுச்சு ஸார். ஆண்டிக்கு முப்பத்தொன்பது வயசு ஆகுதாம். ஆனா மேலேயெல்லாம் நான்

ஒன்னுமே கேட்டது கெடையாது. எனக்கு எல்லா வசதியும் பண்ணிக் குடுத்துருக்காங்க. மூணு வருஷமா அவுங்க செலவுலதான் படிச்சிட்டு இருக்கறேன். பி.ஏ. பாஸ் பண்ணின ஒடனே என்னெ ஃபாரினுக்கு ஹயர் ஸ்டடீஸுக்கு அனுப்பப்போறாங்க. ஆண்ட்டிக்கி ஒரு அத்தை இருந்தாங்களாம். அவுங்களுக்கு ஒரு பொண்ணு இருக்கு. இங்ககூட அது வந்திருந்தது ஸார். அடுத்த வருஷம் எனக்கும் அந்த பொண்ணுக்கும் மாரேஜ் வெச்சிருக்காங்க. ஒரு தடவை அந்தப் பொண்ணு இங்கு வந்திருந்தப்போ ரொம்ப என்னோட பேசீட்டிருந்துது ஸார்! எனக்கு அப்ப தெரியாது கல்யாணம்ன்னு. ஆனா ஆண்ட்டி சொன்னப்போ வேண்டாம்னு சொல்லணும்னு நெனைக்கிறேன். ஆனா முடிலையே சார்!

ஆண்ட்டி கிட்ட வந்தபறம்கூட நான் சின்னப் பையந்தான்னு தெரியிது ஸார்! ஒரு மனுஷன் எப்ப ஸார் பெரியவனா ஆகிறான்? தானா யோசிச்சு தானா எதுவும் முடிவு பண்ணி செய்யும்போதுதானே ஸார்? நான் என்னைக்குமே டீன் ஏஜ் பாயாத்தான் இருப்பேனோன்னு தோணுது ஸார்! என்னெக் கல்யாணம் பண்ணிக்கப் போறாளே அந்தப் பொண்ணு ஜெனி அவகிட்ட கேட்டாங்களாம் ஸார்! என்னெப் புடிச்சிருக்கான்னு அவ''ம்!''ன்னாளாம் ஸார். பின்னால் ஆண்டிக்கி எழுதின ஒரு லெட்டர்ல எழுதியிருக்கா ''ஒங்க கொழந்தை ஜோஸ் எப்டி இருக்கார்?'' அப்டீன்னு! கேலி மாறி இருந்தாலும் இதுல ஒரு விஷயம் தெரியுது ஸார்! அவகூட என்ன ஒரு புருஷனா நெனைக்க மாட்டாள்ன்னு தோணுது ஸார்! ஆன்டி கிட்ட இதெல்லாம் சொன்னா ''பைபிள் எடுத்து படிடா கண்ணா, எல்லாம் சரிய்யாப் போகும்''பாங்க. ஆனா ஆன்டிகிட்ட நான் எப்டி இருக்கங்கறத்துக்கு ஜெனி குடுத்த ஒரு ஸாம்பிள்தான் அதுன்னு நெனச்சுக்கறேன். மைகாட்!

ஆமா ஸார்!

இருட்ட ஆரமிச்சுடுத்து! இப்பல்லாம் இருட்டு கறுப்பா மட்டும் தோணுது சார்! முந்தி இருட்ட ஆரம்பிக்கும் போதே கறுப்போட எத்தனை நெறம் பூத்து வரும் தெரியுமா ஸார்.

எனக்கே ஆச்சரியமாத்தான் இருக்கு.

அடுத்த வருஷம் செப்டம்பர்ல எனக்கும் ஜெனிக்கும் கல்யாணம். அப்புறம் அவளோடெ அமெரிக்காவுக்கோ ப்ரான்ஸுக்கோ ஸ்டடீஸுக்காக போக வேண்டீது!

ஆண்டி கிட்ட வந்தப்பறம்தான் இருட்டு கறுப்பு சுத்தக்கறுப்புன்னு தெரிஞ்சுது. ஆண்டியோட பெட்ரூம்லகூட இருட்டு கறுப்புதான். ஆமா?

எனக்கும் ஒரு வீடு வரப்போகுதே.

அப்ப இருட்டு என்ன நெறத்ல பூக்கும்?

நெஞ்சையெல்லாம் என்னமோ போட்டு பெனைபெனைன்னு கடயற மாதிரி இருக்கு ஸார். ஜெனி வரப் போறாளே அவளோட - ஒண்ணா - தனியா எங்களுக்கே எங்களுக்குன்னு தூங்கும் போதிந்த இருட்டு - சிவப்பா? மஞ்சளா? நீலமா? கறுப்பா? வெள்ளையா? ஊதாவா?

''ச்ச்சம்!ந்த டீன்ஏஜ் ஐடியாஸ் எல்லாம் உனக்கு வேண்டாம்ன்னு எத்தனை தடவை சொல்லீருக்கேன்? - நேரமாச்சு! அங்க யார்ட்டெ பேசிட்டுருக்கே? இருட்டிப் போச்சும்ம! படுக்கவா!-''

ஆமா இருட்டீடுச்சுதான்! கறுப்பா இருட்டியிருக்கு! ஆன்ட்டி கூப்புட்றாங்க! இல்ல! கூப்புட்ற மாறியே இருக்கு.

மூச்சு முட்டுது மூச்சு முட்டுது ஆண்ட்டியொட கட்டில்ல!

(அங்கிள் - 1971)

